Regd: No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone: 420212 4 பக்கம் விலை 80 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55



அன்பு

அன்புடன் வாழவேண்டிய மக்களிடம் இனம், நிறம், நாடு மதம் எனும் பல்வேறு காரணங்களை காட்டி வெறுப்பை ஊட்டிக் கெடுக்கிறோம். அன்பு அரசோச்சினால்தான் அவனியே சொர்க்கமாகும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



அறிவு

அறிவை நாட்டுக்கு பயன்பட வகைசெய்வோம். நாட்டின் அறிவு பொதுச் சொத்தாகவேண்டும் அறிவாற்றலை நாட்டுக்கு தியாகம் செய்ய வேண்டும்.

-புரட்சித்தலைவர்

மலர் 12 சென்னை 24-2-1988 புதன் வெளியீடு 25-2-1988 வியாழன் இதழ் 128

★ தமிழக சட்டமன்றத்தில் இ. காங்கிரசார் போட்டிக்கூட்டம் நடத்தியதே ரத்தக்களறிக்குக் காரணம்

★ பி.எச்.பாண்டியனை பதவி நீக்கம்செய்வதாக அறிவித்ததும் மோசமான செயலாகும்

## ஜனவரி 28 ஆம் நாள் சட்ட சபையை அமைதியாக நடத்த முடியாததற்கு

## இ. காங்கிரசும் - ஜெயலலிதா அணியினருமே

## காரணமென குரானா குற்றச்சாட்டு

## நாடாளுமன்றத்தில் மத்திய உள்துறை அமைச்சர்

# பூட்டாசிங் அறிவிப்பு

**புதுடெல்லி பிப். 24-தமிழ்நாடு சட்டசபையில் துரோகக் குப்பல் இ. காங்கிரஸ் அடங்காப்பிடாரி கோஷ்டியினர் நடந்து கொண்டமுறையை அன்றைய ஆளுநர் குரானா கண்டித்துள்ளார்.**

ஆளுனர் குரானா பரிந்துரை அடிப் படையில் தமிழ் நாட்டில் குடியரசுத் தலைவர் ஆட்சி பிரகடனப் படுத்தப்பட்டது.

ஜனாதிபதி ஆட்சி பிரகடனம் செய்யப் படவேண்டிய நிலை குறித்து உள்துறை அமைச்சர் பூட்டாசிங் நாடாளுமன்றத்தில் பேசும்போது ஆளுனர் குரானா எழுதியிருந்த குறிப்புகளைக் கூறினார்.

தமிழ்நாடு சட்டசபையில் போட்டி கூட்டத்தை(காங்கிரசார் ஜெயலலிதா அணியினா கூட்டியது தவறானது திருமதிஜானகிராமச்சந்திரன் ஆட்சியை டிஸ்மிஸ் செய்வதாகவும் பி எச் பாண்டியனை சபாநாயக பதவியிலிருந்து நீக்குவதாகவும் அந்த போட்டி கூட்டத்தில் அறிவித்தது மோசமான செயலாகும் என்று ஆளுனர் குரானா எழுதியிருப்பதாக பூட்டாசிங் கூறினார்.

இப்படி போட்டி கூட்டத்தை காங்கிரசாரும் ஜெயலலிதா எம்.எல் ஏ. க்களும்) நடத்தியதால் தான் சட்டசபையைஅமைதியாக நடத்த முடியாத ஒரு சூழ்நிலை உருவானது என்றும் அவை தேவையற்ற செயல் என்றும் ஆளுனர் குறிப்பிட்டிருப்பதாக பூட்டாசிங் கூறினார்.

தமிழ்நாடு ஆளுனர் குரானா கட்சிக் கண்ணோட்டமின்றி, சட்டத்துக்கு உட்பட்ட வகையில் நடந்து கொண்டதாகவும் பூட்டாசிங் கூறினார்



சேலம் மாவட்ட எம்.ஜி.ஆர்.இளைஞர் அணி பொருளாளர் எஸ்.எஸ்.எம்.எஸ். குமணன் மற்றும் நிர்வாகிகள் அன்னை ஜானகி எம்.ஜி.ஆரை சந்தித்தனர். திருப்பூர் மணிமாறன் உடனிருக்கிறார்.



தலைமை பொறுப்பேற்றுள்ள சந்திரிகா ரணதுங்காவிற்கு

## ஜானகி எம்.ஜி.ஆர்: வாழ்த்து

சென்னை, பிப். 24-

திருமதி சந்திரிகாகுமார ரணதுங்கா அவர்கள் இலங்கை மகாஜன கட்சியின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டதற்காக அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்தின் சார்பில் தனது வாழ்த்துக்களை அன்னை ஜானகி எம்ஜிஆர் அவர்கள் தந்தி மூலம் தெரிவித்துள்ளார்கள்.

புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் அவர்களுடன் இலங்கை தமிழர் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக தோளோடு தோள் நின்று பாடுபட்டு விடுதலைப் புலிகளுடனும், பேச்சுவார்த்தை நடத்தி தமிழர் சிங்களவர்கள் இணைந்து வாழ்வதற்கு முயற்சிகள் எடுத்ததை போல அவரது மனைவி திருமதி சந்திரிகாகுமாரரணதுங்கா அவர்களும் அவர்களுடைய கட்சியும் இலங்கை தமிழர்கள் நல்வாழ்வுக்காக தொடர்ந்து பாடுபட்டு ஒத்துழைப்பு தருமாறு கேட்டுக் கொண்டு அன்னை ஜானகி எம்ஜிஆர் அவர்கள், திருமதி சந்திரிகா குமார ரணதுங்கா அவர்களுக்கு செய்தி அனுப்பியுள்ளார்கள்.

★ தமிழ்நாட்டில் காங்கிரஸ் "போணி" ஆகாது

★ மூப்பனார் சாதிக்கப்போவது ஒன்றுமில்லை

# ஜானகி எம். ஜி. ஆருக்கு ஆதரவு பெருகி வருகிறது

## காங்கிரசிலிருந்து விலகிய எம். பி. சுப்பிரமணியம் பரபரப்பான பேட்டி

(நமது தலைமை நிருபர் வீ. அரங்கநாதன்)

சென்னை, பிப்24 தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் முன்னாள் தலைவரும், தமிழக இ காங்கிரசில் மூப்பனாரைவிடச் செல்வாக்குப் பெற்று வரும் எம் எல் ஏ, எம் எல் சி பதவி வகித்தவரும் சொல்லின் செல்வர் ஈ வெ கி சம்பத்தின் தோளோடு தோள் நின்று பணியாற்றிய வருமான எம் பி சுப்பிரமணியம் 'அண்ணா' நாளிதழிற்குச் சிறப்புப் பேட்டி அளித்தார்.

புரட்சித்தலைவர் அமைத்த அரசை வஞ்சகமாகவீழ்த்திய இந்திரா காங்கிரஸ் சிவாஜியின் விலகலால் இரண்டாக உடைந்தது இப்போது எம்பி சுப்பரமணியம் விலகி இருப்பதால் மேலும் ஒரு பெரும் பிளவை காணப்போகிறது காங்கிரஸ்.

காங்கிரசில் இருந்து எம் பி சுப்பரமணியம் விலகி இருக்கிறார் இதைத் தொடர்ந்து அவரது ஆதரவாளர்கள் பலலட்சம் பேர் விலக இருக்கிறார்கள்

தமிழக சட்டசபை தேர்தலில் இந்திரா காங்கிரஸ் ஜெயலலிதா அணி வெற்றி பெறாது என்று எம். பி, சுப்பிரமணியம் கருத்து தெரிவித்தார்

தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் முன்னாள் தலைவர் எம் பி சுப்பிரமணியம் காங்கிரசில் இருந்து சில நாட்களுக்கு முன்பு விலகியுள்ளார்.

எம். பி சுப்பிரமணியம் நமது நிருபருக்குப்பேட்டியளித்தார் அந்த பேட்டி விவரம் வருமாறு:-

கே:- காங்கிரசில் இருந்து விலகி இருக்கும் உங்களது எதிர்கால திட்டம் என்ன?

ப:- இந்திரா காங்கிரசின் போக்குபிடிக்காததால் அதில் இருந்து விலகியுள்ளேன் என்னுடைய அதிருப்தியை சில காலமாகவே வெளிக் காட்டி வந்திருக்கிறேன்.

காங்கிரஸ் தலைவரும் பிரதமருமான ராஜீவ்காந்தியிடம் இருந்து 20க்கும் மேற்பட்ட தொலை பேசி அழைப்பு வந்தது.

அவா என்னதான்நினைக்கிறார் என்பதற்கும் எனதுஉடைய நிலை என்ன என்பதற்கும் நேரில்சென்று சொல்லிவிடுங்கள் என்றும் நண்பர்கள் தெரிவித்தனர்அதனால்சென்றேன்

### தலைமை ஆட்டம்

சிவாஜிகணேசன்காங்கிரசில் இருந்து விலகியதால் காங்கிரஸ் தலைமை ஆடிப் போயிருக்கிறது இதற்கு மேல் நானும் வெளியேறி மேலும் உடைப்பை தவிர்க்கவே வழி காணப் பார்த்தார்கள்

### பேரம்

எனக்கு தமிழ்நாடு காங்கிரஸ் தலைமை பதவி, மூப்பனார தேர்தல் பிரசாரக் குழு தலைவா ஒரு எம் பிக்கு மந்திரி பதவி என்று ஒரு திட்டம் தந்தார்கள் இதை நானும் ஏற்கவில்லை. பிரதமரும் ஏற்கவில்லை. என் துனுடைய கருத்தை பிரதமரிடம் தெரிவித்து விட்டு வந்தேன். பிறகு நான் காங்கிரசில் இருந்து ராஜினாமா செய்து விட்டேன்.

கேள்வி:- புதிய கட்சிதுவக்கப் போகிறீர்களா? அல்லது சிவாஜி கட்சியில் சேரப் போகிறீர்களா? அல்லது ஜன் மோர்ச்சாவில் சேரப் போகிறீர்களா?

பதில்:- புதிய கட்சி துவக்கும் எண்ணம்எதுவும்இல்லை சிவாஜி எனது நண்பர்,

இந்த இரண்டு கட்சியில் எதில் சேரலாம் என்று எனது ஆதரவாளர்களிடம் பேசி வருகிறேன்.

மாவட்ட வாரியாக எனது ஆதரவாளர்களை சந்தித்து வருகிறேன் இன்னும் சில நாட்களில் எனது முடிவை அறிவிப்பேன்.

கே: தமிழக தேர்தல் எப்படி இருக்கும் என்று கருதுகிறீர்கள்?

ப:- எந்த சூழ்நிலையிலும் இந்திராகாங்கிரஸ் ஜெயலலிதா அணிவெற்றிபெறாது இதற்குக் காரணம் 1984 தேர்தலில் ஒன்றாக இருந்த காங்கிரஸ் ஒன்றாக இருந்த அண்ணா தி மு அணி வெற்றி பெற்றது.

இப்போது ஜெயலலிதா அணிஒருபிரிவாக இருக்கிறது காங்கிரசில் இருந்து சிவாஜி அணி பிரிந்து இருக்கிறது. இந்த நிலையில் அந்த அணி வெற்றி பெறாது

அதோடு இலங்கை தமிழர் பிரச்சினை வேறு இருக்கிறது இலங்கை பிரச்சனையில் இந்தியா தலையிடுபற்றி நாம் சாதனையாக சொல்ல ஒன்றும இல்லை. சமாதானம் சொல்ல வேண்டிய நிலையிலேயே இருக்கிறோம் இதுவும் காங்கிசுக்கு பாதிப்புதான்

கே: தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக மூப்பனார வருகை பற்றி உங்கள் கருத்து என்ன?

ப: மூப்பனார் இங்கு வந்துள்ளதால் என்ன சாதிக்கப் போகிறார் இதுவரைஇருந்து

(2ம் பக்கம் பார்க்க)

ராஜீவ் அரசு சாதனை பிளாட்பாரம்

டிக்கெட் 150 காசுகள்

# பயண சரக்கு கட்டண உயர்வு: பயமுறுத்தும் ரெயில்வே பட்ஜெட்

புதுடெல்லி பிப். 24- ரயில்வே பட்ஜெட்டை நாடாளுமன்றத்தில் மத்திய ரயில்வே 1988-89 ஆண்டிற்கானரெயில்வேபட்ஜெட்டில பயணிகள், சரக்கு கட்டணங்கள், பிளாட்பாரம் டிக்கெட் உட்பட அத்தனையும் உயர்த்தப் பட்டுள்ளன. சாதாரண பொதுமக்களை மிகவும் பாதிக்கும் பட்ஜெட் இது என்று எதிர்க் கட்சித்தலைவர்கள் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

1988-89 ஆம் ஆண்டிற்கானரெயில்வேபட்ஜெட்டை நாடாளுமன்றத்தில் மத்திய ரெயில்வே அமைச்சர் மாதவ்ராவ் சிந்தியா இன்று (புதன்கிழமை) சமர்ப்பித்தார்.

சரக்குக் கட்டணம் ஆறு சதவிகிதம் உயர்த்தப் பட்டுள்ளது சரக்குக் கட்டணம் மட்டும் 241கோடி ரூபாய் உயர்த்தப்பட்டுள்ளது பயணக் கட்டணமும் உயர்த்தப்பட்டுள்ளன. ரூபாய் 351 கோடி அளவிற்கு பயணக் கட்டணம் உயர்த்தப்பட்டுள்ளது.

அரசுக்குச் செலுத்த வேண்டிய ரூபாய் 736 கோடி பங்குத் தொகை போக 28 கோடி ரூபாய் உபரியாக கிடைக்குமென அமைச்சர் தெரிவித்தார்.

### கொடுமை

ரயில்வே நிலையம் என்றாலே பயப்படுகிற மாதிரி பிளாட்பாரம் டிக்கெட்டு ரூபாய்ஒன்றிலிருந்துஒன்றரை ரூபாயாக உயர்த்தப்பட்டுள்ளது.

கட்டண உயர்வுகள் மூலம் ரூ, 622 கோடி கிடைக்கும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது இரண்டாம் வகுப்பு துரித ரயில் பயணக் கட்டணம் இரண்டு ரூபாயிலிருந்து 15 ரூபாய் வரை உயர்த்தப்பட்டுள்ளது,

இந்த கட்டண உயர்வுகள் 1988 ஏப்ரல் முதல்தேதி முதல் அமலுக்கு வரும்.

# சட்டசபையில் காங்கிரஸ் வன்முறை

**தமிழக சட்டசபையில் நடந்த வன்முறைக்கு காங்கிரஸ்தான் பொறுப்பு அவர்கள்தான் வன்முறையை தொடங்கினார்கள். இன்று அவர்கள் சபா நாயகரை நீக்க வேண்டும் என்று ஊர்வலம் போவது வேடிக்கையாக இருக்கிறது.**

ஈரோட்டில் செய்தியாளர்களிடம் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கூறியது.

## தலைமைக் கழக அறிவிப்பு

கர்நாடக மாநில அனைத்திந்திய அண்ணாதி.மு.கழக அமைப்புக்குழு.

தலைவர்
திரு. ஜி அப்பு அவர்கள்
செயலாளர்
திரு. கோ. தாமோதரன் எம்.சி. அவர்கள்
துணைச் செயலாளர்கள்
திரு. கே. சண்முகம் அவர்கள்
திரு கே சடகோபன் அவர்கள்
பொருளாளர்
திரு எச் விட்டல் அவர்கள்
முன்னாள் கவுன் சிலர்
உறுப்பினர்கள்
திரு பி லீலாகிருஷ்ணன் அவர்கள்
திரு ஆர். எஸ் ராஜன் அவர்கள்
திரு எம் கோவிந்தராசன் அவர்கள்

கழகத் தலைவர்

**அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்.**

அவர்களின் அனுமதியுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**எஸ். இராகவானந்தம்**
[பொதுச் செயலாளர் பொறுப்பு]
மூத்த துணைப் பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சென்னை-14
24-2-88

# பெரியார் மாவட்டத்தில் ஆய்வுக்குழு நிகழ்ச்சிகள்

அனைத்திந்திய அண்ணா தி மு கழக தலைமைக் கழகத்தின்மூலம் பெரியார் மாவட்டத்துக்கு மாவட்டம் முழுதும் உள்ள ஒன்றியங்களிலும் நகரங்களிலும் 'ஆய்வுக்குழு' கீழ்க்காணும் தேதிகளில் சுற்றுப்பயணம் செய்ய இருக்கிறது. இந்தக் குழுவில்:

திரு. சு. முத்துசாமி,
கொள்கை பரப்பு செயலாளர்
திரு. கோ வேல்முருகன்
அண்ணா தொழிற்சங்க பேரவை பொதுச் செயலாளர்
திரு. ஜீ. கே. எஸ்.
செயலாளர், பெரியார்மாவட்ட எம்.ஜி.ஆர்.மன்றம்
திரு. டாக்டர் அ. பொன்னுசாமி
மாவட்ட செயலாளர், பெரியார் மாவட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி
திரு. எஸ். வி ஞானசேகரன்
பெரியார் மாவட்ட துணைச் செயலாளர்

அனைத்துப் பொறுப்பாளர்களும் ஊழியர், கூட்டம் பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யும் பொழுது உடனே மாவட்ட துணைச் செயலாளர் திரு. ஞானசேகரன் அவர்களை ஈரோட்டில்-அலுவலகத்திலோ அல்லது தொலை பேசி மூலமாகவோ (76250) தொடர்புகொள்ள பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்,

இவண்
**ஆய்வுக் குழுவினர்**
பெரியார் மாவட்டம்

பெரியார் மாவட்ட அனைத்திந்திய அண்ணா தி மு கழகம் 'ஆய்வுக்குழு' சுற்றுப்பயணம்

**25-2-1988**
காலை - 09.00 ஈரோடு நகரம் ஒன்றியம்
மாலை - 03.00 காங்கயம், சென்னிமலைஒன்றியங்கள்
இரவு - 07.00 காங்கயம் பொதுக்கூட்டம்

**26-2-1988:**
காலை 09-00
பெருந்துறை, ஊத்துக்குளி ஒன்றியங்கள்
மாலை 03-00
மொடக்குறிச்சி, கொடுமுடி ஒன்றியங்கள்
இரவு 07.00 மொடக்குறிச்சி பொதுக்கூட்டம்

**27-2-1988:**
காலை-09.00
அம்மாப்பேட்டை-அந்தியூர் ஒன்றியங்கள்
மாலை 03.00
பவானி ஒன்றியம், நகரம்
இரவு-07.00
அந்தியூர் பொதுக்கூட்டம்
இரவு-09.00
தூக்க நாய்க்கன் பாளையம் பொதுக்கூட்டம்

**28-2-1988:**
காலை - 09.00
பவானி சாகர், நம்பியூர் ஒன்றியங்கள்.
மாலை - 03.00
கோபி ஒன்றியம்.
மாலை - 05.00
கோபி கொடியேற்று விழா, பொதுக்கூட்டம்

**29-2-1988.**
காலை 09.00 வெள்ளக்கோயில், மூலனூர் ஒன்றியங்கள்
மாலை-03.00 தாராபுரம் நகரம் ஒன்றியம்
இரவு-07.00 ஈரோடு பொதுக்கூட்டம்.

**1-3-1988**
காலை 09.00
சத்திய மங்களம் தூக்கநாய்க்கன் பாளையம் ஒன்றியங்கள்
மாலை 03.00
தாளவாடி ஒன்றியம்
மாலை 05.00
தாளவாடி பொதுக்கூடம்

''ஐயோ நெஞ்சு பொறுக்கவில்லை... இறைவா தமிழகத்தைக் காப்பாற்று''

# ஜெயலலிதா ஆசைபடுவது முதல்வர் பதவிக்கே அசிங்கம்

## நடிகர் திலகம் சிவாஜிகணேசன் சவுக்கடி

ஈரோடு. பிப். 24-

முதல்வர் பதவிக்கு ஜெயலலிதா கூட ஆசைபட ஆரம்பித்துவிட்டார். அந்த அளவுக்கு முதல்வர் பதவியை கேவலப் படுத்துகிறார்கள் என்று நடிகர் திலகம் சிவாஜி கணேசன் குறிப்பிட்டார்.

''தமிழக முன்னேற்ற முன்னணி'' கட்சி தலைவர் சிவாஜிகணேசன் ஈரோடு சென்றார் அவருக்கு அங்கு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

புதிய இயக்கம் கண்ட சிவாஜிகணேசன் தனதுமுதற் கட்ட சுற்றுப்பயணத்தைத் தொடங்கினார்.

தொடக்கத்தின் முதற் கட்டமே வெற்றியாக அமைந்தது ஈரோடு ரயில் நிலையத்தில் அதிகாலைப் பொழுதில் பல்லாயிரக்கணக்கான இயக்கத் தோழர்களும், சிவாஜி ரசிகர் மன்றத்தினரும் சிவாஜியை வரவேற்றனர்.

சிவாஜி வாழ்க என்று முழக்கமிட்டனர். அதிர் வேட்டுக்கள் முழங்கின.

சிவாஜி கணேசனுக்கு தளபதி சண்முகம், ராஜசேகரன். முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் இளங்கோவன், செல்லப்பா, சொர்ணலிங்கம், வெங்கடரமணன் உள்பட பலர் மாலைகள் கைத்தறி ஆடைகளை அணிவித்தனர்.

ரெயில் நிலையத்தில் இருந்து சிவாஜி திறந்த ஜீப்பில் அழைத்து வரப்பட்டார்.

அங்கே கூடியிருந்த மக்களிடையே சிவாஜி பேசினார் அவர் பேசியதாவது:-

உங்கள் அன்பான வரவேற்புக்கு என் இதயங்கனிந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். இன்று நான் தந்தைபெரியார் பிறந்த மண்ணில் பெரியாரின் பாதமலர்களை வணங்கி எனது அரசியல் புது வாழ்வை தொடங்கி இருக்கிறேன் இந்த அரசியல் வாழ்க்கை வெற்றிகரமாக அமைய என்னை வாழ்த்துங்கள்.

என்னை உங்கள் வீட்டு பிள்ளையாக ஏற்றுக்கொள்ளுங்கள் தமிழ் சமுதாயத்தினரே உங்களில் ஒருவன் நான் என்னை வாழ்த்துங்கள் என்று பேசினார்.

இரவு நடைபெற்றபொதுக் கூட்டத்தில் சிவாஜிகணேசன் பேசியதாவது:

தந்தை பெரியாரிடம் நான் அரசியல் பாடம் படித்தேன் அறிவுக்கண் திறந்தபெரியார் பிறந்த இந்த ஊரில் நான் முதல் கூட்டம் பேசத் தொடங்கி உள்ளேன் எங்கிருந்து நான் உருவாக்கப் பட்டேனோ அங்கேயே வந்து நிற்கிறேன்

எனக்கு வயது 60ஆகிறது என் அரசியல் வாழ்வுக்கு 30 வயது எனது இத்தனை கால அரசியல் வாழ்வும் பாழாகி விட்டதே

எந்த சோசலிஷத்துக்காக பாடுபட்டோமோ இந்தியா முழுவதும் ஓடி ஓடி உழைத்தோமோ அந்த லட்சியத்தை அழித்து விட்டார்களே இந்த காங்கிரஸ்காரர்களும் பண முதலைகளும்.

இப்போது மூப்பனார் ஒரு பக்கம் முதல்வர் என்கிறார் நெடுஞ்செழியனும் முதல்வர் என்கிறார். ஜெயலலிதாவும் முதல்வராவேன் என்கிறார் முதல்வர் பதவி என்பது கேவலமாகிவிட்டது, மக்கள் தான் முதல்வரை தேர்ந்து எடுக்கவேண்டும்.

எனக்கு காங்கிரசில் கேவலம் ஏற்பட்டபோது எல்லாம் காங்கிரசைவிட்டு வெளியேற நினைத்தேன். பிள்ளைகளை நான் அன்பால் அதட்டுவேன் காங்கிரசில் இப்போது கண்டவர்களுக்கெல்லாம் அதிகாரம் உள்ளது.

இதுவரை காங்கிரசுக்கு ஓட்டுப்போடுங்கள் என்று கேட்டு தவறு செய்துவிட்டேன் இனிமேல்காங்கிரசுக்கு ஓட்டுப்போடாதீர்கள் என்று கேட்பேன்.

இவ்வாறு சிவாஜிகணேசன் பேசினார்



### பேச்சாளர் முகவரி:

கோடையிடி
இராமமூர்த்தி
[தலைமைக்கழக பேச்சாளர்]
நாகலாபுரம் அஞ்சல்
விளாத்திகுளம் வட்டம்
சிதம்பரனார் மாவட்டம்
627904

### எம். பி. எஸ். பேட்டி...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

வந்த பழனியாண்டி அவரது பிரதி பிம்பதான் அவர் தான் அடிப்படைத்து வந்தார் புதிதாக எதை சாதிக்க போகிறார் 1976ல் அவர் தான் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் அதற்குப் பிறகு நடந்த தேர்தலில் மத்தியில் இந்திரா காங்கிரஸ் ஆளுங் கட்சி தகுதியில் இருந்து எதிர்க்கட்சியாக மாறும் நிலை ஏற்பட்டது. அந்த யோக அதிருஷ்டம் அவருக்கு இருக்கிறது.

கே: தமிழக அரசியல் கட்சி நிலை பற்றி என்ன கருதுகிறீர்கள்.

ப: ஜானகி அம்மையார் அவர்கட்கு ஆதரவு அதிகரித்து வருவதாக பலரும் சொல்கிறார்கள்.

இவ்வாறு எம். பி. எஸ். கூறினார்.

### நாமகிரிபேட்டை கிருஷ்ணன் மனைவி மரணம்

சேலம், பிப். 24-

தமிழ்நாடு அரசு அரசவைக் கலைஞர் (நாதஸ்வரவித்வான்) நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனின் மனைவிகோமளம் அம்மாள் சேந்தமங்கலத்தில் மரணமடைந்தார்.

முன்னாள் அமைச்சர்கள் அரசியல் தலைவர்கள் பிரமுகர்கள் மற்றும் கலைஞர்கள் நேரில் வந்து அஞ்சலி செலுத்தினர்.

### ''தாய்'' இதழ் சீனிவாசன் மாமனார் மறைவு

சென்னை, பிப். 24-

''தாய்'' வார இதழ் விநியோக மேலாளர் சீனிவாசனின் மாமனார் கே. துரைராஜ (வயது 54) சென்னை பொது மருத்துவமனையில் நேற்று முன்தினம் இரவு 12 மணியளவில் காலமானார் வ.உ.சி. மாவட்டம் மேல அருணாசலபுரத்தைச் சேர்ந்த கே. துரைராஜ் சிகிச்சைக்காக வந்த இடத்தில் காலமானார் அவருக்கு மனைவியும் ஒரு மகளும் இரண்டு மகன்களும் இருக்கின்றனர்.

இறுதிச் சடங்கு நேற்று (செவ்வாய்) மாலை நடந்தேறியது. ஏராளமான உறவினர்கள் நண்பர்கள் பத்திரிகையாளர்கள் இறுதிச் சடங்கில்கலந்துகொண்டனர்

### துணை ஜனாதிபதி உடல்நலக் குறைவு

புதுடெல்லி, பிப். 24-

துணை ஜனாதிபதி சங்கர் தயாள்சர்மாவுக்குஉடல்நலக் குறைவு ஏற்பட்டுள்ளது. டாக்டர்கள் விரைந்து சென்று அவருக்கு சிகிச்சை அளித்தனர்.

### 42வது வட்டத்தில் காளிமுத்து பேசுகிறார்

சென்னை, பிப். 24-

சென்னை 42வது வட்டம் சுப்பராயமுதலி தெருவில் கழக துணைப் பொதுச்செயலாளர் கா. காளிமுத்துஉரையாற்றுகிறார்.

கூட்டத்திற்கு ஓ. ம. ப. வொடி பிரசாத் தலைமை தாங்குகிறார் கு. அருள்மணி முன்னிலை வகிக்கிறார் கோ முனுசாமி ஆபிரகாம் ஆகியோர்வரவேற்புநிகழ்த்துகின்றனர். ஜேப்பியார் சைதை துரைசாமி ஆகியோரும் கூட்டத்தில் பேசுகின்றனர். நினைத்தை முடிப்பவன் எம். ஜி. ஆர் மன்றம் இக்கூட்டத்தை ஏற்பாடு செய்துள்ளது.

## தலைமைக் கழக அறிவிப்பு

சென்னை மாவட்டம்:
திரு. இரா. மோகனரங்கம் அவர்கள்
திரு. பா, அங்கமுத்து அவர்கள்
திரு. சைதை துரைசாமி அவர்கள்
செங்கறபட்டு மாவட்டம்
திரு கே.பாலாஜி அவர்கள்
திரு.வேலூர் நாராயணன் அவர்கள்
வடாற்காடு மாவட்டம்
திரு. த. பழனி அவர்கள்
திரு.ஏ.வ. வேலு அவர்கள்
திரு.இரா.ச. மாறன அவர்கள்
திரு.டி. அன்பழகன் அவர்கள்
தென்னாற்காடு மாவட்டம்
திரு: கே. முருகுமணி அவர்கள்
திரு தண்டபாணி! அவர்கள்
திரு. முகமதுஅனிபா அவர்கள்
திரு.கோ மூர்த்திராமன் பி.ஏ.பி.எல்.அவர்கள்
திரு பூமாலை சண்முகம் பி ஏ பி எல் அவர்கள்
திரு சீனு. ஜெயராமன் பி.ஏ.பி.எல். அவர்கள்
சேலம் மாவட்டம்
திரு. செ. செம்மலை அவர்கள்
திரு, கே.பி. ராமலிங்கம் அவர்கள்
கோவை மாவட்டம்
திரு.க.மருதாசலம் அவர்கள்
திரு நா.கருப்பசாமி அவர்கள்
திரு.பேரூர் க.சண்முகசுந்தரம் அவர்கள்
நீலகிரி மாவட்டம்
திரு உச்சிகவுடர் அவர்கள்
கிழக்கு தஞ்சை மாவட்டம்
திரு.டி,வீராசாமி அவர்கள்
திரு.கோ.வி,நாராயணசாமி அவர்கள்
மேற்கு தஞ்சை மாவட்டம்
திரு.டி,வீராபீமி அவர்கள்
திரு.பி. என். ராமச்சந்திரன் அவர்கள்
திரு வி.ஆர் கே.பழனியப்பன் அவர்கள்
மதுரை மாவட்டம்
திரு.ஏ.பாலுச்சாமி அவர்கள்
திரு. சி,தங்கம் அவர்கள்
இராமநாதபுரம் மாவட்டம்
திரு.கவிஞர் முத்துராமலிங்கம் அவர்கள்
புதுக்கோட்டை மாவட்டம்
திரு.வி.ஒ.எஸ்.பன்னீர்செல்வம் அவர்கள்
திரு.வெங்கடாசலம் அவர்கள்
திரு.ஜாபர் அலி அவர்கள்
திரு.அச்சகம ராஜகோபால் அவர்கள்
திரு. காசிமுத்து மாணிக்கம் அவர்கள்
திரு.வி.சி.கணேசன் அவர்கள்
காமராஜர் மாவட்டப்
திரு.பொ.அன்பழகன் அவர்கள்
வ உ சிதப்பரனார் மாவட்டம்
திரு இரா. கிருஷ்ணன் அவர்கள்
நெல்லைமாவட்டம்
திரு எம் பி அழகியநம்பி அவர்கள்
குமரி மாவட்டம்
திரு இராகவன் அவர்கள்
திரு எம் ஜே பஷீ அவர்கள்

கழகத் தலைவர்

**அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்.**

அவர்கள் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**திரு. எஸ்.இராகவானந்தம்**
(பொதுச்செயலாளர் பொறுப்பு)
மூத்ததுணைப் பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமுகழகம்

சென்னை-14
24-2-88

# உன்னை விட மாட்டோம் [5]

ஊழல் ஊதுகுழலின் பிழைக்கும் பத்திரிகையாளர்கள்-எவருக்கும் விசுவாசமில்லாதவர்கள்-காலைப் பிடிப்பதுபோல காலை வாரி விடுபவர்கள் என்பது சொல்லித் தெரியவேண்டிய விஷயமல்ல. ஆனால் யார்யாரை எப்படி எப்படி எப்வெப்போது ஏமாற்றினார்கள் என்பதை அம்பலப்படுத்தவே தொடர் தேவைப்பட்டது.

இது ஒரு சிரமசாத்தியமான வேலை. 10 வருடங்கள் ஓய்வு ஒழிவில்லாமல் இரவுபகலாக எழுதி ''கின்னஸ்'' புத்தகத்தில் இடம் பிடிக்கும் வெறியுடனும் வேகத்துடனும் எழுதத் தொடங்கினாலும் பிழைக்கும் பத்திரிகையாளர்களின் அக்கிரமத்திற்கு முழுவடிவம் கொடுத்துவிட முடியாது.

இப்படிப்பட்ட துரோகிகள்- அந்த அந்த நேரத்தில் யார் காலையாவது பிடித்து தங்கள் பையை நிரப்பிக் கொள்வதோடு நிறுத்திக் கொண்டால்- ''எப்படியாவது வாழலாம் என்ற கும்பல்'' என்ற முடிவோடு நாம் விட்டு விடலாம்,

ஆனால் உலகம் போற்றும் உத்தமத் தலைவர் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற வள்ளல் பெருமான் யுகபுருஷர் தவசீலர் புரட்சித்தலைவர் தந்த பணத்தில் வளர்ந்தவர்கள்- இன்று அவரைப் பற்றியும் அவரது ஒரே வாரிசாம் எங்கள் அன்னையார் பற்றியும் அவதூறாக அபாண்டமாக அராஜகமாக எழுதத் துவங்கப்பட்ட பிறகு தமிழகம் கொதித்தெழுந்து விட்டது.

இந்தக்கட்டுரைத் தொடருக்கு ஆதரவாக வந்து குவிகிற கடிதங்களைப்பார்க்கும்போது ஆங்காங்கேயிருந்து ந்த அயோக்கிய சிகாமணிகளின் திரைமறைவு இ வேலைகள் பற்றி தாமாகவே சிலர் அனுப்பியுள்ள ஆதாரங்களைப்பார்க்கும்போது தமிழகம் இவர்களுக்கு எதிராக கோபாக்கினியாக-திமையை அழிக்கும் ஊழித்தீயாக மாறி நிற்பதை உணர்கிறோம்.

நமது குற்றச்சாட்டுகளுக்கு நேரடியாகப் பதில் சொல்ல வக்கற்ற- வகையற்ற- திராணியற்ற- தெம்பற்ற பிழைக்கும் பத்திரிகையாளர்கள்-

**நம்மைத் தற்குறி என்று எழுதி மகிழ்கிறது. தப்பிலியாகத் தான் இருக்கக் கூடாது தற்குறியாக இருப்பதில் தவறில்லை.**

இந்த தேசம் விடுதலை அடைந்த போது எழுத்தறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை முப்பது சதவீதத்தைக் கூட எட்டிப்பிடிக்கவில்லை. இன்னும் கூட நமது கல்விமுறைதிருப்திப்படும்படியாக இல்லை எண்பதுசதவீத கிராமங்களைக் கொண்ட இந்தியாவில்- யாரை ''தற்குறிகள்'' என்று இந்தத் ''தப்பிலிகள்'' கூறுகிறார்களோ அவர்கள்தான் இந்தியஜனநாயக அமைப்பு நொறுங்கி சிதைந்து விடாமல் காத்து வருகிறார்கள் மக்கள் விரோதிகள் படித்து என்ன பயன்?

அமரர்பட்டுக்கோட்டையார் அதனால் தான்

படிக்காதவன் சோறு போட்டான்
படித்தவன் கூறு போட்டான்

என்று பாடினார்.

எழுத்தறிவு கல்வியாகாது.

பல்மொழி அறிவும் கல்வியாகாது. கல்வி என்பது ஒழுக்கத்தால் பிரகாசிக்க வேண்டும். ஒழுக்க மற்றவர்கள் நியாயமற்றவர்கள்; எதையும் செய்து எப்படியும் பிழைப்பவர்கள் இதயவற்றவர்கள் பல நிறம் காட்டும்பச்சோந்திகள் இவர்கள் கற்ற கல்வியை விட கல்லாதவர்களே மேன்மக்கள் மனச்சாட்சிக்கும் தெய்வத்திற்கும் பயப்படுகிறவர்கள் அவர்கள்.

மெத்தப் படித்த மேதாவிகளே - உங்களைப் படிக்காதவர்கள் என்று நாங்கள் சொன்னதில்லை.

**உங்களுக்கு மூளையில்லை என்று நாங்கள் சொன்னதில்லை உங்களுக்கு இதயம் இல்லை என்பதே எங்களது குற்றச்சாட்டு அது உண்மை என்பதை தமிழகம் அங்கீகரித்து ஆண்டு பலவாயிற்று.**

நீங்கள் புத்திசாலிகள் அறிவாளிகள் அல்ல. அறிவாளி அறிவாளி என்பது சமூக மேன்மைக்காக மக்கள் நலத்திற்காக சிந்திப்பவன் உழைப்பவன்- அர்ப்பணிப்பவன் ''புத்திசாலி'' தனக்கு தன் குடும்பத்திற்கு தன் கும்பலுக்கு என்று எல்லாவற்றையும் விற்றுப் பிழைப்பவன் நீங்கள் புத்திசாலிகள்

உங்கள் புத்திசாலித்தனத்தை நேரடியாக நாங்கள் கண்டவர்கள் ஒரு தமிழ் நாளிதழை கையிலெடுத்து-தட்டெடுத்து இயந்திரத்தின் முன் அமர்ந்து ஒரு வினாடி கூடச் சிந்திக்காமல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் ஆற்றல் பிழைக்கும் பத்திரிகையாளர்

''நப்பர் ஒன்றுக்கு''

உண்டுமறுக்கவில்லை, தலைப்பு போடுதல், மிக நீண்ட பேச்சில் ஜீவநாடி எங்கேயிருக்கிறது என்பதை

**கார்த்திக்**

ஒரிரு நிமிடங்களில் கண்டுபிடிக்கிற திறமை. பிழைக்கும் பத்திரிகையாளர் ''நம்பர் டூ'' வற்கு உண்டு மறுக்கவில்லை ''நம்பர் டூ'' இந்தத் திறமையை ஆதித்தனார் எனும் பல்கலைக்கழகத்தில் பயின்றதையும் நாம் அறிவோம் அந்த ஆதித்தனாருக்கே துரோகம் செய்தவர்கள் என்ற உண்மையும் எங்களுக்குத் தெரியுமல்லவா?

# திறமையிருந்து என்ன பயன்? இதயம் இல்லையே!

எனவே, பிழைக்கத் தெரிந்த புத்திசாலிகளே விஷயத்திற்கு வருவோம்.

நண்பர் பாலுமூலம் அன்பிலைப் பிடித்தாகிவிட்டது ''மக்கள்குரல் கட்டிடத்தை'' தொழிற் பகுதியாக மாற்றிக்கொடுக்க மாநகராட்சி அதிகாரிகளுக்கு அவர் சொல்லி விட்டார்.

அப்போது சென்னை மாநகராட்சியின் தனி அதிகாரியாக திரு. டி. வி அந்தோணி ஐ. ஏ. எஸ். இருந்தார்கள். பின்னாளில் தமிழக அரசின் தலைமைச் செயலாளரான அந்தோணி அப்போது நிர்வாகத்திறமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார் கண்டிப்பான அதிகாரி என்று அப்போது அவருக்குப் பெயர்.

அமைச்சர் பரிந்துரை செய்திருந்தாலும் அவரையும் ''தாஜா'' செய்வது நல்லது என்று உங்கள் கிரிமினல் மூளை திட்டம் தீட்டியது.

வடிவேலு என்று மிக மூத்த பத்திரிகையாளர் அன்பாளர்: மூத்த தலைமுறை அரசியல் தலைவர்கள் அதிகாரிகளின் அன்பிற்கு மட்டுமல்ல - மரியாதைக்கும் உரியவர்.

திரு. வடிவேலு திரு டி வி அந்தோணியை மட்டுமல்ல முன்னாள் தலைமைச் செயலாளரான அவரது தந்தையார் வர்கீஸ் அவர்களையும் தெரியும் எனவே திரு. வடிவேலுவை ''மக்கள் குரல்'' பத்திரிகையின் மாநகராட்சி நிருபராக நியமித்தீர்கள்.

''திரு டி வி அந்தோணி பற்றி ஏதாவது ஒரு செய்தி அவரது படத்துடன் ''மக்கள்குரலில்'' வெளிவர வேண்டும்'' என்று திரு வடிவேலுவிடம்கேட்டுக் கொண்டீர்கள்

தாட்சண்யம் தட்டமுடியாத திருவடிவேலு தள்ளாத வயதில் இந்தபொறுப்பை ஏற்றுக் கொண்டார் தினமும் மாநகராட்சிக்குச் சென்றார்.

டி வி அந்தோணி காரில் வந்தார். இறங்கினார் லிப்டில் ஏறி மேலே சென்றார் லிப்டில் ஏறாமல் மாடிப்படியில் நடந்தே மேலே ஏறிச் சென்றார் - தும்பினார் - இரும்மினார் - சஃபாரிசூட் அணிந்துவந்தார், கோட்,சூட் அணிந்துவந்தார்கறுப்பு நிற ஷூ அணிந்தார்-சிவப்பு நிற ஷூ அணிந்தார் என்றெல்லாம் அவருடைய படத்துடன் ''மக்கள் குரலில்'' அன்றாடம் செய்தி வெளியிட்டீர்கள்.

காரியம் முடிந்தது. டி வி அந்தோணியின் தயவு இனி உங்களுக்குத் தேவையில்லை.

அப்போது நூறாண்டு கால வரலாறு காணாத தண்ணீர்ப் பஞ்சம் சென்னையில் மழை பெய்யாததற்கு டி. வி அந்தோணியே காரணம். முறையாக குடிநீர் வழங்கப்படாததற்கு டி. வி.அந்தோணியின் திறமையின்மையே காரணம் என எழுதத் தொடங்கினீர்கள்.

ஊரும் உலகமும் என்ன நினைக்கும் என்பது பற்றித்தான் உங்களுக்குக் கவலை இல்லையே!

(தொடரும்)

இந்திய நாடாளுமன்ற வரலாற்றில் இதுவரை இல்லாத பயங்கர கலாட்டா

★ நாடாளுமன்றத்தில் மத்திய மந்திரி ப. சிதம்பரம் அடாவடி
★ துணை ஜனாதிபதி வேதனை-பதவி விலகல் அறிவிப்பு

மத்திய மந்திரிகளிடம் சொல்லி

# ரகளையை தூண்டியவர் ராஜீவ்

## 11 எதிர்க்கட்சி தலைவர்கள் கண்டனம்

**புதுடெல்லி, பிப். 24- மாநிலங்களவையில் அவைத் தலைவரை மீறி மத்திய அமைச்சர்களே கலாட்டாவில் இறங்கினர். நான் பதவி விலகுகிறேன் என்று துணை ஜனாதிபதி அறிவித்தார். மத்திய அமைச்சர்களை பிரதமரே தூண்டிவிட்டதாக எதிர்க்கட்சித் தலைவர்கள் குற்றம் சாட்டியுள்ளனர்.**

ஆந்திர மாநில ஆளுனர் செல்வி குமுத்பென்ஜோஷி, அளவுக்கு அதிகமாக அரசாங் கப்பணத்தைசெலவுசெய்வது குறித்து மாநிலங்களவையில் தெலுங்கு தேசக்கட்சித்தலைவர் உபேந்திரா ஒரு பிரச்சினையை கிளப்பினர்

அதுபற்றி பேச உபேந்திராவுக்கு அவைத்தலைவர் டாக்டர் சங்கர் தயாள்சர்மா அனுமதியளித்தார்,

அதைத் தொடர்ந்து உபேந்திரா பேச ஆரம்பித்தார்

அதை காங்கிரஸ் உறுப்பினர்கள் ஆட்சேபித்தனர்

ஆளுனரின் பிரச்சினை குறித்து இங்கே மாநிலங்களவையில் பேச முடியாது-அனுமதிக்கக் கூடாது என்று காங்கிரஸ் உறுப்பினர்கள் கூறினார்கள்.

ஆளுநரின் செலவுக்கு வரம்புஒன்றைமத்திய சட்டம் மூலம்நாடாளு மன்றம் வரையறை செய்துள்ளது. எனவே அதைப் பற்றி விவாதிக்க இந்த அவைக்குஉரிமைஉண்டு என்றுஉபேந்திரா பதில்அளித்தார்.

### உரிமை உண்டு

உபேந்திரா பேசுவதை ஆளும்கட்சி உறுப்பினர். சிந்தாமணி பாணிக்கிரகி ஆட்சேபித்தார்.

''நான் தவறான முன்னுதாரணம் எதையும் உருவாக்கவில்லை மத்திய சட்டத்தில் கண்டுள்ளபடி ஒதுக்கப்பட்ட தொகையை ஆளுநர் செலவழிப்பதை இந்த அவையின் கவனத்துக்குக்கொண்டுவர உறுப்பினர் உபேந்திராவுக்கு உரிமை உள்ளது என்று சங்கர்தயாள் சர்மா கூறினார்.

### பிரதமரின் தூண்டுதல்

உபேந்திரா பேசும் போது காங்கிரசார் குறிக்கிட்டுக் கொண்டே இருந்தனர்.

அப்போது சபையில் பிரதமர் ராஜீவ் காந்தியும் இருந்தார்.

காங்கிரஸ் உறுப்பினர்களை பிரதமர்ராஜீவ் காந்தி தூண்டிவிடுவதாக மார்க்சிஸ்ட் உறுப்பினர் தீபன் கோஷ் மற்றும் சில உறுப்பினர்கள் குற்றம்சாட்டினர்.

உபேந்திரா தனது குறிப்புரையைக்கூற அனுமதிக்காவிட்டால் ஏதோதவறு நடந்துள்ளதுஎன்றுமக்கள் நினைப்பார்கள் என்று அவைத் தலைவர் சர்மா கூறினார்.

அவையின் நேரத்தையும் பணத்தையும் இ. காங்கிரஸ் உறுப்பினர்கள் வீணடிப்பதாகவும் அவைத்தலைவர் சங்கர்தயாள்சர்மா கூறினார்.

உபேந்திரா பேச முற்பட்ட போது காங்கிரஸ் உறுப்பினர்கள் அனைவரும் எழுந்து நின்று எதிர்த்தனர்.

மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் சில சட்ட விதிகளை பேச முற்பட்டார்.

அவைத்தலைவர் ஆட்சேபித்தும் அவர் பேச முற்பட்டார்.

அவைத் தலைவர் இதனால் கோபமுற்றார்.

''எனக்கு சட்டம் பற்றி கற்றுத்தர சிதம்பரம் முயற்சிக்கக்கூடாது சிதம்பரம் பிறப்பதற்கு முன்பே சட்டம் படித்தவன் 'நான்' என்று டாக்டர் சங்கர் தயாள்சர்மா கூறினார்.

நீங்கள் உறுப்பினரின் வாயை அடைக்க முடியாது காங்கிரஸ் உறுப்பினர்கள், மத்திய அமைச்சர்கள் கூறியவை அவைக் குறிப்பில் இடம்பெறாது என்று சர்மா ஆணையிட்டார்.

### பதவி விலக தயார்

இந்த அவையில் நீங்கள் பெரும்பான்மை பலத்தோடு இருக்கிறீர்கள் இத்தகைய சூழ்நிலையில் நான் அவைத்தலைவராக தொடர்ந்து இருக்க வேண்டிய கட்டாயம் எனக்கு இல்லை அவைத் தலைவர் நாற்காலியில் அமர நான் அருகதையற்றவன் என்று நீங்கள் கருதினால் நான் வெளியேறத் தயார் என்று கூப்பிய கரங்களுடன் சர்மா கூறினார்.

பின்னர் சபை ஒத்தி வைக்கப்பட்டது.

(கவர்னர் வருடம்9 லட்சம் ரூபாய் செலவழிக்கலாம் என்று விதி உள்ளது. ஆனால் ஆந்திர கவர்னர் செல்வி குமுத்பென்ஜோஷி வருடத்திற்கு ரூபாய்50லட்சம் வரை அரசு பணத்தை செலவிடுவதாகபுகார் எழுந்தது.)

### எதிர்க் கட்சி தலைவர்கள் கண்டனம்

காங்கிரஸ் உறுப்பினர்களை பிரதமரே தூண்டி விட்டதாகஎதிர்க்கட்சித்தலைவர்கள் 11 பேர் ஒரு அறிக்கையில் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

இது ஜனநாயக விரோத செயல் என்றும் அவர்கள் கூறியுள்ளனர்.

கழக எம். பி. ஆலடி அருணா உட்பட 11 பேர் அந்த அறிக்கையில் கையெழுத்திட்டுள்ளனர்.

(தமிழக சட்டசபையில் 5காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் பதவி விலகலை அறிவித்ததும் சட்டசபைக்குள்ளேயே அந்த 5எம்.எல்.ஏக்களை காங்கிரசார் இழுத்துப் போட்டு உதைத்ததும் இதனால் சபையில் அமளி ஏற்பட்டதும் தெரிந்ததே.)

### சூரானா நடவடிக்கை

தமிழ்நாட்டில் ஆளுநர் ஆட்சி பிரகடனப்படுத்தப்பட்டதற்கு மக்களவை அங்கீகாரம் அளித்தது

## தலைமைக் கழக அறிவிப்பு

**2 3 1988 புதன்கிழமை**

ஈரோடு நகரம்
(பெரியார் மாவட்டம்)
கலை நிகழ்ச்சி
இராஜபாளையம் திரு. மணிசாமி-புஷ்பாகலைக்குழுவினர்
நிகழ்ச்சி ஏற்பாடு
ஈரோடு நகர அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

**3 3 1988 வியாழக்கிழமை**

ஈரோடு ஒன்றியம்
(பெரியார் மாவட்டம்)
கலை நிகழ்ச்சி
இராஜபாளையம் திரு. மணிசாமி-புஷ்பா கலைக்குழுவினர்
நிகழ்ச்சி ஏற்பாடு
ஈரோடுஒன்றிய அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

**4 3 1988 வெள்ளிக்கிழமை**

தாராபுரம் ஒன்றியம்
(பெரியார் மாவட்டம்)
கலை நிகழ்ச்சி
இராஜபாளையம் திரு. மணிசாமி-புஷ்பா கலைக்குழுவினர்
நிகழ்ச்சி ஏற்பாடு
தாராபுரம் ஒன்றிய அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

**5 3 1988 சனிக்கிழமை**

தாராபுரம் ஒன்றியம்
(பெரியார் மாவட்டம்)
கலை நிகழ்ச்சி
இராஜபாளையம் திரு. மணிசாமி-புஷ்பா கலைக்குழுவினர்
நிகழ்ச்சி ஏற்பாடு
தாராபுரம் ஒன்றிய அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சு. முத்துசாமி
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சென்னை-14
24-2-88

## ஏல விற்பனை

1. பி மாங்கிலால் மேத்தா 3 தையப்ப முதலி லைன் சென்னை-1 (15-2-86 முதல் 20-12-86 முடிய) ஏலத் தேதி 4-3-88 2. கே பாரஸ்மல் ஜெயின் 37 கந்தன்தெரு சென்னை-30 (1-4-86 முதல் 31-12-86முடிய)ஏலத் தேதி4-3-88 3.எம் ஹஸ்முக் குமார் 7/5 சல்பண்டபம் ரோடு சென்னை-13(1-6-86 முதல் 20-12-86முடிய) ஏலத் தேதி 7-3-88 4 காந்திலால் சஜ்ஜன்ராஜ் 20 எஸ். வி. கோயில் தெரு சென்னை-1 (1-7-85 முதல் 30-12-86 முடிய) ஏலத்தேதி 11 3 88 5. பி சாந்திலால் ஜெயின் 55-1 வைத்தியநாத முதலி தெரு சென்னை 1 [1-5-86 முதல் 31-12-86 முடிய] ஏலத்தேதி 17-3-88 6. மாங்கிலால் அண்டுகோ 43, அருணாசலம் தெரு சென்னை-2 (1-4-86 முதல் 30-10-86 முடிய) ஏலத்தேதி 17-3-88 7. யு.சுக்ராம் 8,வி. எம் தெரு சென்னை-14 1-1-86முதல் 1.1.87 முடிய) ஏலத்தேதி 18,3.88

மேற்படி கடைகளில் அடகு வைத்துமீட்கப்படாத பொன், வெள்ளி இதர பொருட்களைமேற்படிதேதிகளில் காலை 10 மணிக்கு மேல் வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏலதாரர்களான எம். ஜவஹர்லால் போரா அவர்களால் 31, மங்கபதி நாயக்கன் தெரு சிந்தாதிரிப்பேட்டை சென்னை-2 விலாசத்தில் ஏலம் போடப்படும்.





அன்னை ஜானகி எம்,ஜி ஆர். அவர்களின் அரசைக் கலைத்த துரோகிகளின் சதிச்செயலைக் கண்டித்தும்

அன்னை ஜானகி எம்ஜி,ஆர்,அவர்களை கழகத்தலைவராக தேர்ந்தெடுத்த பொதுக்குழு செயற்குழு உறுப்பினர்களுக்கு நன்றி தெரிவித்தும்

## மாபெரும் பொதுக்கூட்டம்



நாள் : 25-2-88 வியாழக்கிழமை
நேரம் : மாலை 7 மணி
இடம் : சுப்ராய முதலி தெரு, 42வது வட்டம் பெரம்பூர் பகுதி

தலைமை : ஓமப்பொடி சி. பிரசாத்
முன்னிலை : கு. அருள்மணி, கிருஷ்ணாசிங்

வரவேற்புரை : கோ. முனுசாமி, க. ஆபிரகாம்

சிறப்புரை : **டாக்டர் கா.காளிமுத்து** எம் ஏ. பி.எச் டி.
(கழக துணைப் பொதுச்செயலாளர்)

**ஜேப்பியார்** எம் ஏ **சைதைசா. துரைசாமி**

சி. ஜெயபால்
மா.சு. மணி
புரசை ராஜாராம்
க. உதயகுமார்
பி.தேசிங்
சி.எ. சூசை
எஸ். மனோகரன்
வி,எஸ். சண்முகம்
உபகாரமேரி
எம்.கே,சாமிநாதன்
எம்.ஜெயபிரகாசம்

கா.மு.சுந்தரம்
என் துரைராஜ்
தாமோதரன்
இருதயநாதன்
டி,டி,சண்முகம்
செங்கோல தாஸ்
என்.கே.பாஸ்கரன்
ஓட்டேரி
என். பாண்டியன்
ஜீ. முத்து
ஜெ வில்லியப்ஸ்

எம்,பரமானந்தம்
சி. எஸ்-மூர்த்தி
டாக்டர் மணிவண்ணன்
வி.வெங்கடேசலு
கில்லேடி கிருஷ்ணன்
ஜீ. கிருஷ்ணன்
மோகன சுந்தரம்
சிவலிங்கம்
நெடுஞ்செழியன்
மற்றும் பலர்

நன்றியுரை : அந்தோணிராஜ்

கூட்ட அமைப்பு : நினைத்ததை முடிப்பவன் எம் ஜி ஆர் மன்றம் 42-வது வட்டம்

### 112-வது வட்ட செயல் வீரர்கள் கூட்டம்

சென்னை, பிப். 24- சென்னை112வது வட்டம் சாலிகிராமம் பகுதி புரட்சித் தலைவர் எம்ஜிஆர் மன்றம் மற்றும் எம்ஜிஆர் இளைஞர் அணி செயல் வீரர்கள் கூட்டம் மாவட்டப் பிரதிநிதி என். எம். துரையரசன் தலைமையில் நடைபெற்றது. 119வது வட்டச் செயலாளர்கோ. சாமிநாதன் 112 வட்ட துணைச் செயலாளர் கே. ஜெகநாதன் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

கூட்டத்தில் 112வதுவட்ட எம் ஜி ஆர்மன்ற தலைவர் கே பால்ராஜ் செயலாளர் வி. பார்த்தீபன் பொருளாளர் மெக்கானிக்ராஜு துணைத் தலைவர் என் தமிழ்ச்செல்வன் துணைச் செயலாளர் ஜி உமாபதி துணைப்பொருளாளர் எம சதானந்தன் மன்ற கௌரவ ஆலோசகர் சி பி தமிழ் வேந்தன், மற்றும் வி தமிழ்ச் செல்வன் ஆகியோர் பங்கேற்றனர்.

# கழகத்தோழர்கள் மீது தாக்குதல் நடத்திய அடங்காபிடாரி கும்பல்

## ஒடுகாலிகள் 17 பேர் கைது

திருப்புவனம். பிப். 24- அன்னை ஜானகி எம்ஜிஆர் கூட்டத்துக்கு வந்த கழகத் தோழர்களின் கார்களை அடங்காப்பிடாரி ஜெயலலிதாவின் ஆதரவாளர்கள் அடித்து நொறுக்கினார்கள் இதுதொடர்பாக அடங்காப்பிடாரியின் ஆதரவாளர்கள் 17 பேரை போலீசார் கைது செய்தனர்.

இது பற்றிய விவரம் வருமாறு:

அன்னை ஜானகி எம். ஜி. ஆரின் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக பசும்பொன் மாவட்ட கழக பொருளாளர் கொத்தங்குளம் கருப்பையா காரில் புறப்பட்டு வந்தார்.

திருப்புவனம் அருகேஉள்ள புதூர் என்னும் இடத்தில் அடங்காப்பிடாரி ஆதரவாளர்கள் அந்தக்காரை வழி மறித்து தாக்கினார்கள். கார் அடித்து நொறுக்கப்பட்டது.

இந்த சம்பவம் தொடர்பாகலட்சுமணன், கார்மேகம் உசேன் சிக்கந்தர் ராஜா உள்பட 7பேர் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது'

### கார் தூள்தூள்

திருப்புவனம் அருகே உள்ள தேலி என்ற கிராமத்தில் இருந்து ஒன்றியச்செயலாளர் ஆண்டி அம்பலம் வந்தார் இவரது காரையும் காலிகள் தாக்கினார்கள் காரின் முன்பக்க கண்ணாடிகள் உடைந்து நொறுங்கின.

இது தொடர்பாக லெட்சுமணன், பாம்பன்சிக்கந்தர், உசேன் அம்பலம் பாதர் வெள்ளை செல்லையா. ராவுத்தர் உள்பட 10 பேர் மீது போலீசார் வழக்குப் பதிவு செய்துள்ளனர்,

### போலீஸ் காயம்

இந்த சம்பவம் தொடர்பாக அடங்காப்பிடாரியின் ஆதரவாளர்கள் 17 பேர்கைது செய்யப்பட்டுள்ளனர் சம்பவத்தின் விளைவாக திருப்புவனம் ஏட்டு இஸ்ரேல் காவலர் ஜெயராமன் ஆகியோருக்கு காயம் ஏற்பட்டது

மதுரை நிகழ்ச்சிகளில் பங்கேற்பதற்காக புரட்சித் தலைவரின் மாம்பலம் ஆபீஸ் முத்து அவரது சொந்த ஊரான திருப்புவனம் சென்று புரட்சித்தலைவர் ஜோதி எடுத்துவர ஏற்பாடு செய்துவிட்டு காரில் திரும்பியபோது அவரது காரையும் அடித்து நொறுக்கினர்.

காரைக்குடி டி.எஸ் பி ராஜேந்திரன் சிவகங்கை டி எஸ் பி சண்முகசுந்தரம் திருப்புவனம் இன்ஸ்பெக்டர் ஜெகநாதன் சப்இன்ஸ்பெக்டர் செல்லையா ஆகியோர் வழக்குப்பதிவு செய்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.



# அய்யோ பாவம் நாவலர்!

சென்னை தேரடித்திடலில் அடங்காப்பிடாரி ஒடுகாலிக் கும்பலின் கூட்டமொன்று நடந்தது நாராயணசாமி நாவலர் பிரதானப் பேச்சாளர்.

''தம்பீ வா தலைமையேற்க வா. உன் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறோம்.'' என்று பேரறிஞர், பெருந்தகை அமரர் அண்ணாவால் அழைக்கப்பட்ட நாராயணசாமி நாவலர் மேனாமினிக்கியின் காலடியில் வீழ்ந்து கூனிக் குறுகி குள்ளமாகிப் போய் விட்டார். ஆனால் வாய் நீளம் மட்டும் போகவில்லை நா..வல..ர் அல்லவா?

தேரடிக் கூட்டத்திற்கு நாராயணசாமி நாவலர் வந்து நெடுநேரம் கழித்து-அவரை விட அடங்காப்பிடாரிக்கு வேண்டியவரும் சட்டசபையை ரணகளமாக்க துரோகக் கும்பல் காங்கிரசோடு கைகோர்த்து நின்றவருமான 'சண்டியர்' மதுசூதனன் வந்தார்

மேடையிருந்தவர்கள் எழுந்து நின்றார்கள். நாவலர் எழுந்திருக்கவிட்டால் தூக்கியெறிந்து விடுவார்களோ என்ற அச்சத்தில் அமர்ந்திருந்தது அவரது முகக்குறியிலேயே தெரிந்தது.

''எங்கள் தலைவர் மதுசூதனன் வாழ்க'' என்று 'செட் அப்' கோஷ்டிகள் காட்டுக்கூச்சல் போட்டன.

ஒரே களேபரம். 'எங்கள் தலைவர் மதுசூதனனைப் பேச விடுங்கள், என்று 'செட் அப்' கும்பல் குரல் கொடுக்க நாராயணசாமி நாவலர் கூனி குறுகிப் போனார்.

மேடையில் நாவலருக்கு 10, 15 மாலை துண்டுகள் போடப்பட்டன். ''சண்டியர் மதுசூதனனுக்கு'' 300 துண்டுகள். மாலை கள்பாவம்., நாவலர்... சேராத இடந்தனிலே சேர வேண்டாம்'' என்ற முதுரையை மறந்து விட்டதால் வந்தவினை,

அடங்காப் பிடாரியின் காங்கிரஸ் கூட்டணியை எதிர்த்து நாராயணசாமி நாவலர் பேசியபோது கூட்டத்தில் சலசலப்பு

'மைக்' கிடைத்தால் விடாமல் பேசும் வழக்கத்தைமாற்றிக் கொள்ளாத நாராயணசாமி நாவலர் கண்ணை மூடிக் கொண்டு மணிக்கணக்கில் பேசினார்.

**''பாவம் நாராயணசாமி நாவலர்'' என்று பரிதாபப்பட்டால் கழக அடலேறுகளுக்கு கோபம் வரும் எனக்கு ஏன் வம்பு?**

-கா

Edited and Published by K. RAVINDRAN on be healf of Thanga-mani publications and printed by all India Anna D.M.K. Perari gnar Anna Trust Press at 34, NelsonManickam Road, Madras-600 029.



# புரட்சி மலர்கள்

டாக்டர்

## கா.காளிமுத்து

**தமிழக முன்னேற்ற முன்னணியின் தலைவர் - நடிகர் திலகம் சிவாஜி - தனது சுற்றுப் பயணத்தைத் தொடங்கிவிட்டார் மனம் திறந்து - மக்களிடம் எண்ணங்களை எடுத்து வைக்கிறார்.**

தந்தை பெரியாரின் பிறந்தகமான ஈரோட்டு மண்ணில் - அவர் பேசிய பேச்சு - நாட்டு மக்களுக்கு காங்கிரசின் - கோரமான உள் உருவத்தை - கொலைவெறி படைத்த அதன் நாசகார்த்தனத்தை - நீசத்தனத்தை அம்பலப்படுத்தியிருக்கிறது.

**"எம். ஜி. ஆருக்குக் காங்கிரஸ் துரோகம் செய்துவிட்டது. அவர் கல்லறை காயும் முன்பாகவே அவருக்குத் துரோகம் செய்துவிட்டனர்.**

## இதயதெய்வத்தின் இதயம் வாழ்த்தும்!

**அருமை அண்ணன் எம். ஜி. ஆருக்கு 'பாரத ரத்னா' பட்டத்தைக் கொடுத்து விட்டு அவர் பிணத்தின் முதுகிலேயே குத்தி விட்டீர்களே! பாவிகளே! பாவிகளே!! அந்தக் கட்சி (இ. காங்கிரஸ்) ஈனத்தனமான கட்சி அல்லவா? நாசகரமானகட்சி அல்லவா? தர்மத்தைக் கொன்ற பாவிகளே? சொந்த வீட்டிலேயே இரத்தத்தைக் குடிக்கும் சண்டாளர்களே! நீங்கள் நடந்து கொண்டது நியாயமா?"**

-மாலை முரசு )23-2-88)

குமுறும்புயல் கொந்தளிக்கும் கடல் இவ்வளவும் உள்ளடங்கியிருக்கிறது நடிகர் திலகத்தின் உரையில்!

தனது முப்பதாண்டுக்கால அரசியல் வாழ்வை உதறியெறிந்து விட்டு தமிழ் மக்களிடம் உண்மையை உரத்த குரலில் உரைத்திட சிவாஜி முன்வரக் காரணம். புரட்சித்தலைவரின் அரசுக்குக் காங்கிரஸ் இழைத்த துரோகம் தான்!

காங்கிரஸ் ஆட்சிக்குவர-காங்கிரஸ்காரர் என்ற முறையில் சிவாஜியும் விரும்பினார்! பாடுபட்டார்! ஆனால் எப்படி? மக்களைச்சந்தித்து தனிப்பெரும் பான்மையைத் தேர்தலில் பெற்று-ஆட்சி அமைப்பதில் தவறில்லை.

தூங்கும்போது கல்லைத் தூக்கிப் போட்டு-நம்பியவனைக் கழுத்தறுத்து-மக்கள் விரும்பாமலேயே-கட்சி தாவிய அரசியல் கயமைக்குத் துணைநின்று-ஆட்சி பீடத்தைப் பிடிக்க நினைத்த அருவறுக்கும் முறையைக் கருவறுக்க நினைத்தார்-காங்கிரசை விட்டே வெளியேறினார் நடிகர் திலகம்!

**அரசியலில் அவரைப் போல நல்ல உள்ளம் கொண்டவர்களும் இருப்பதால் தான் தர்மத்தின் வாழ்வைச் சூது கவ்வும் அளவோடு நிற்கிறது! இல்லையேல் விழுங்கிச் செரித்தே விடும்!**

**நடிகர் திலகம் சிவாஜி! மக்கள் திலகம் எம் ஜி. ஆர்!**

கலையுலகிலும் அரசியல் உலகிலும் இருவரையும் சண்டைச் சேவல்களாகவே சித்திரித்தது உண்டு.

ஆனால்-அந்தப் போட்டிக்கு இடையிலும் உள்ளார்ந்த பாசமும்-பரிவும் இருவருக்கும் இடையில் இழையோடியது!

புரட்சித்தலைவர்-வாழ்ந்த காலத்தில் அவருக்குப் பக்கத்தில் நின்று பல்லெல்லாம் தெரியக் காட்டிய பண்ருட்டிச் சகுனி - அவரது ஆட்சியைக் கவிழ்க்க டெல்லிக்குப் "புரோக்கர்" வேலையே பார்த்தார்?

**புரட்சித்தலைவரைச் சந்திக்கும் போதும் விடைபெறும் போதும் அவரது காலைத்தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டவர்கள். புரட்சித் தலைவரது ஆட்சியைக் காலைவாரி விடத் துணைசெய்தது மட்டுமன்றி புரட்சித்தலைவரது துணைவியாரைப் பற்றியே நமது அருமை அன்னையைப் பற்றியே தூற்றித்திரிகிறார்கள்**

கேட்டினும் உண்டோர் உறுதிகிளைஞரை நீட்டி அளப்பதோர் கோல்' என்கிறார் வள்ளுவர் துன்பம் வருகிறபோதுதான் - நண்பர்கள் யார் நண்பர்களைப் போல நடித்த நச்சுக்கிருமிகள் எவை என்பதைத் துல்லியமாக அறியமுடிகிறது!

**இக்கட்டான நிலையில் - நான்கு பக்கமும் வேடர் சுற்றிட நடுவில சிக்கிய மான்போல் அன்னையின் அரசு தவித்தபோது - எதிரணியிலிருந்து ஒரு சிம்மக்குரல் அன்னைக்கு ஆதரவாக எழுகிறது!**

அந்த இடிக்குரல் காங்கிரஸ் போட்ட சதியையே தகர்த்துத்தரைமட்டமாக்குகிறது.

**அது சிவாஜியின் வெண்கல மணிக்குரல்! ஆனால் தோட்டத்து சோற்றில் உடல் பெருத்த சோற்றுத்துருத்திகள் சில - அழிக்க முனைந்த காங்கிரஸ் பகைவர்களோடு கை குலுக்குகின்றன.**

அவர்களோடு சேர்ந்துநம் கழுத்தையே திருக வருகின்றன. புரட்சித்தலைவரின் ஆட்சியை வீழ்த்துவதில் தான்-புரட்சித்தலைவரின் கையால் வாழ்வும் வளமும் பெற்றிருந்த அனுமதேயங்களுக்கு எவ்வளவு துடிப்பு! துள்ளல்!

புரட்சித் தலைவரோடு நட்புக்காட்டி அவர் மறைந்தபின் வஞ்சனை செய்தகாங்கிரசின் செயலை - நடிகர்திலகம் ஈனத்தனமானது என்கிறார் - நாசக்கரமானது எனக்குமுறுகிறார் சிவாஜி!

**தர்மத்தைக் கொன்று விட்ட பாவிகள் காங்கிரஸ்காரர்கள் என்று கண்ணில் கனல் சிந்திச் சுட்டெரிக்கப் புறப்பட்டிருக்கிறார் அவர்!**

காங்கிரஸ் - அன்னை ஜானகி எம். ஜி. ஆரின் அரசை அழிக்க முற்பட்டதே இவ்வளவு கொடுமை என்றால் - புரட்சித்தலைவரின் உடனிருந்து பதவிச்சுகத்தைஅனுபவித்து விட்டு காங்கிரஸ் கட்சியின் எடுபிடிகளாகி விட்ட - கடைந்தெடுத்த அயோக்கிய சிகாமணிகளின்செயலை என்ன சொல்வது?

**புரட்சித்தலைவர் அணிக்கு-எதிரேயிருந்த அண்ணன் சிவாஜி தலைவருக்குக் காட்டிய பரிவில்-குன்றிமணி அளவேனும் கொள்ளாத படுபாதகர்களை-தருமம் சும்மா விடுமா? சத்தியம் - அவர்களைத் தண்டிக்காது விட்டுவிடுமா?**

புரட்சித்தலைவரின் ஆட்சியைக் கவிழ்த்திடத் திட்டமிட்ட காங்கிரஸ்காரர்களின் செயலை காங்கிரசில் இருந்த சிவாஜியால் தாங்க முடியவில்லையே?

ஆட்சியிலேயே இருந்து புரட்சித் தலைவரால்ஐ நா.சபையையே பார்க்கப்போன சண்டாளர்களை நாம் எப்படிக் கருதுவது?

**அந்தக் கருங்காலிக் கூட்டத்தினரை கருவறுகக துணியாவிட்டால் புரட்சித் தலைவரின் தம்பியராக இருக்கின்ற தகுதி நமக்கு வருமா?**

ஈரோட்டுக் கூட்டத்தில் சிவாஜி மற்றொரு விளக்கத்தையும் தந்து நம் மதிப்பில் உயர்கிறார்!

"இ. காங்கிரசை உடைக்க ரூ. 1 கோடி வாங்கினேன் என்று கூறுகிறார்களே ஆமாம்! வாங்கினேண்டா வாங்கினேன். மறுக்கவில்லை! அது பணமா? இல்லை! இல்லவே இல்லை கோடிக்கணக்கான என் அருமை அண்ணன் எம்ஜிஆரின் இரத்தத்தின் இரத்தமான உடன்பிறப்புகளின் இதயங்களை நான் வாங்கிவிட்டேன்,

(மாலை முரசு 23-2-88)

நெஞ்சை பிளந்த காங்கிரஸ் கூடாரத்திலிருந்து வெளியே வந்து புரட்சிப்பாசறை கண்ட சிவாஜி நம் நெஞ்சில் உயர்ந்து விட்டார்.

**"கோடி கொடுத்தும் குடிப்பிறந்தோர் தம்மோடு கூடுதல் கோடி பெறும்"! கோட்டு கோடி கொடுப்பினும் தன்னுடை நாக்கோட்டாமை கோடி பெறும்!**

**பல கோடி பெறுமான பண்பார்ந்த செயலை அண்ணன் சிவாஜி செய்து விட்டார்! அவரது தியாகத்தை வெறும் பணத்தை அளவுகோலாகக் கொண்டு அளவிடுவதுகூடமுறையில்லை! வரலாறு அவரை வாழ்த்தும் வங்கக் கடலோரம் துயிலும் இதயதெய்வத்தின் இதயம் வாழ்த்தும்.**

## கவர்னரின் 3-வது ஆலோசகர் நியமனம்

சென்னை, பிப். 24- தமிழக கவர்னரின் மூன்றாவது ஆலோசகராகஜி.வி. ராமகிருஷ்ணா நியமிக்கப் பட்டிருக்கிறார்.

இது பற்றி அதிகாரப்பூர்வமான அறிவிப்பு நேற்று வெளியிடப்பட்டது அவர் மார்ச் 2-ந்தேதி பதவிஏற்றுக் கொள்கிறார்.

## அன்னையார் முன்னிலையில் கழகத்தில் மாணவர்கள் இணைந்தனர்

சென்னை, பிப். 24 தலைமைக் கழகத்தில் அன்னை ஜானகி எம்ஜிஆர் முன்னிலையில் சென்னை நகரில் உள்ள கல்லூரி மாணவர்கள் பலர் கழகத்தில் இணைந்தனர்.

சென்னை பிரசிடென்சி கல்லூரி புதுக்கல்லூரி பச்சையப்பன் கல்லூரிகளைச் சேர்ந்த முன்னூறுக்கும் மேற்பட்ட மாணவர்கள் புரசை ரவிக்குமார், மாநிலக் கல்லூரி சிட்டி, புரசை விஜயன் ஆகியோர் தலைமையில் கழகத்தில் இணைந்தனர்,

அப்போது மாணவர் அணி செயலாளர் கா. லியாகத் அலிகான் துறைமுகம் காஜா ஆகியோர் உடனிருந்தனர்.

# அன்னையின் பக்கமே நாங்கள் என நிரூபித்த சேலம் மக்களே ஆயிரம் கோடி வணக்கங்கள்

### கே. பி. செல்வராசு நன்றி அறிவிப்பு

சேலம், பிப். 24. அன்னை ஜானகி எம்.ஜி-ஆர். பக்கமே நாங்கள் என்று எடுத்தியம்பிய சேலம் மாவட்ட மக்களே உங்களுக்கு ஆயிரம் கோடி வணக்கங்கள் நன்றிகள் என்று சேலம் மாவட்ட கழக செயலாளர் கே.பி. செல்வராசு ஓர் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

கே. பி.செல்வராசு தனது நன்றி அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

சேலம் மாவட்டத்திற்கு 20-ம் தேதி வருகை புரிந்த அன்னை ஜானகி எம்ஜிஆருக்கும் இரவுபகல் பாராது அன்னையின் வருகைக்காக அரும்பாடுபட்ட, விழாக் குழுவினர் கழக நிர்வாகிகள் முன்னாள் அமைச்சர்கள்முன்னாள் வாரியத் தலைவர்கள் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் மாவட்டக்கழக நிர்வாகிகள்ஒன்றிய நகர பேரூராட்சி ஊராட்சித் தலைவர்கள் மற்றும் கழகத் தொண்டர்களுக்கும் மாவட்டக்கழக நன்றியைதெரிவித்துக்கொள்கிறது

சேலம்மாவட்டம்அன்னையின் பக்கமே என்றுநிரூபித்த லட்சோப லட்சம்மக்களுக்கு மாவட்டக்கழகம்சார்பில்நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்

இவ்வாறு கே பி செல்வராசு அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.



## கே. பி. எஸ். வேதனை

நிருபர்களுக்கு கே பி.எஸ் சூட்கேட்ஸ் கொடுத்ததாக ஒரு பத்திரிகையில் வந்த பொய்ச் செய்தி குறித்து அவர் கண்டனம் தெரிவித்தார்.

"ஒரு பத்திரிகையில் நான் சூட்கேஸ் கொடுத்ததாக எழுதியதைக்கண்டிக்கிறேன். தனது சீடர்களை அனுப்பி உதவி பெற்றவர்கள் இப்படி எழுதுவதை நினைக்கும் போது நான் மிகவும் வேதனைப்படுகிறேன்" என்று கே. பி. செல்வராசு தெரிவித்துள்ளார்.

அன்னையாரைச் சந்தித்து சேலம் (தெற்கு) மாவட்டச் செயலாளர் செல்வராஜ் சேலம் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டதற்காக நன்றி கூறினார்.

## 90 வது வட்டத்தில் கழக கூட்டம்

நாள்: 24-2-88 மாலை 7 மணி

தலைமை: மா, சம்பத்

சிறப்புரை: ஜேப்பியார், என். வி. என். செல்வம். வி. ராஜ்குமார் மு. அன்புத்தம்பி சுமா. ராகவன் மொ. பழனி கே. நந்து பா. ஜெகன்

கூட்ட அமைப்பு 90-வது வட்டக்கழகம்.